*Drinking water-supply scheme for Cuddalore*

* 809 *Q.*—SRI S. THANGAVELU : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) கடலூர் தாலுகாவில், காடாம்புலியூர், நடுக்குப்பம், மருங்கூர் இந்தக் கிராமங்களுக்கு குடி தண்ணீர் திட்டம் ஒன்று சர்க்கார் பரிசீலனையில் இருக்கிறதா ?

(ஆ) அப்படியானுல் எத்தனை கிணறுகள் முடிவாகியிருக்கிறது ?

(இ) அதற்கான ஆன செலவுகள் எவ்வளவு ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) (ஆ) & (இ) The Government have no ready information and they have called for a report.

Sir, since this answer has been furnished, I have the following information to give :—

காடாம்புலியூரைப் பொறுத்த வரையில் அங்கே ஒரு போரிங் கிணறு அமைத்து ஒவர்ஹெட் டாங்க் வைப்பதற்கு 54,000 சில்லரை ரூபாய் ஸாங்ஷன் ஆனது. அதில் சென்ற மாத முடிவு வரையில் 52,000 ரூபாய் செலவாகி அந்த வேலே முடிவாகியிருக்கிறது. நடுக்குப்பத்தில் அந்தத் திட்டத்திற்கு 44,000 ரூபாய் செலவு மதிப்பிடப்பட்டிருக்கிறது. அதில் சுமார் 10,000 ரூபாய் செலவாகியிருக்கிறது. மீதி வேலேகள் இனிமேல் நடக்கும். மருங்கூரில் அந்தத் திட்டத்திற்குள்ள எஸ்டிமேட் 2,000 சில்லரை ரூபாய். அதில் இப்போது கான்ட்ரிப்யூஷன் கொஞ்சம் வரவேண்டியிருக்கிறது. கொஞ்சம் கான்ட்ரிப்யூஷன் வந்திருக்கிறது. அதாவது 3,400 ரூபாய் வந்திருக்கிறது. இன்னும் கொஞ்சம் தொகை வரவேண்டியிருக்கிறது. இப்போது அந்தத் திட்டத்திற்கு 40,000 ரூபாய் செலவாகும் என்று சொல்லப்பட்டதால், அதற்கு போர்டார் மூலம் வர வேண்டிய பணத்திற்கு அவர்களுக்கு எழுதியிருக்கிறோம். குடி தண்ணீர் வசதிக்கு அங்கே இந்த அளவுக்கு நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது.

SRI S. THANGAVELU : இந்த சர்க்கார் இம்மாதிரி ஆயிரக் கணக்காக ரூபாய்கள் செலவழித்து மக்களுக்குக் குடி தண்ணீர் வசதி செய்து கொடுத்திருந்த போதிலும், ஒரு சிலர், சிந்திரி, முந்திரி என்றெல்லாம் பேசுகிறுர்களே. சர்க்கார் இம்மாதிரியான காரியங்களேச் செய்வது அவர்களுக்கெல்லாம் தெரியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: அப்படி எல்லாம் பேசுகிறுர்கள். அதற்கு என்ன செய்ய வேண்டுமென்றுல், அப்படிப் பேசுகிறவர்களே கனம் அங்கத்தினர் இம்மாதிரியான வசதிகள் செய்து தரப்பட்டுள்ள இடங்களுக்கு அழைத்துக்கொண்டுபோய் அவர்களுக்கு அவைகளேக் காட்டலாம். (சிரிப்பு)

*Excise duty on Coffee, Vegetable oil, Kerosine, etc.*

* 810 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 31-8-59-ல் நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 103-க்கு அளித்த பதிலே யொட்டி காப்பி தாவர எண்ணெய் மண் எண்ணெய்